உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவமஹிம்ந ஸ்தோத்திரம்

★

ஸ்ரீ. புஷ்பதந்தர் அருளிச்செய்தது.

★



தமிழாக்கியவர் :

கவியரசு, வித்துவான்

கு. நடேச கவுண்டர், P. O. L.

கோயமுத்தூர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அணிந்துரை

**திரு. சி. சு. கண்ணாயிரம்,**

( உதவி விவசாய வருமான வரி அலுவலர், கோவை )

"எங்ங னிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்ங னிருந்ததென் றுந்தீபற
அறியும் அறிவதன் றுந்தீபற" [ திருவுந்தியார்–4 ]

உலகில் நாம் காணும் பொருள்கள் எல்லாவற்றுக்கும் மிக நுண்ணியது ஆன்மா. மிகப்பெரியன என்று நாம் அறியும் பேரண்டங்களின் தொகுதிகளெல்லாம் இறைவனை நோக்கப் பரமாணுக்கள்போல மிக நுண்ணியனவாகும். இதனால் ஆன்மாக்களின் சிறுமையும் இறைவனது பெருமையும் உய்த்துணரப்படும். அத்துணைச் சிறிய ஆன்மா தன்னுடைய சிற்றறி

வையும் சிறிய ஆற்றலையும்கொண்டு சிந்தனைக்கும் அரிய பரம் பொருளின் சிறப்பியல்புகளை எடுத்து விளக்கிப் போற்றுதல் எவ்வாற்றானும் இயலாத செயலே. ஆயினும் இயல்பாகவே பாசங் களாற் பிணிப்புண்ட உயிர்கள் அவற்றின் தொடக்கினின்று நீங்கி வீட்டின்பம் பெறுவதற்கான ஒரே வழி இறைவனைச் சரணடைந்து அவனது பெரும் புகழை இடையறாது கூறித் துதிப்பதேயாகும்; தம்மிச்சையாக இச்செயலில் ஈடுபடும் ஆற்றலற்ற உயிர்களுக்காக மிகஇரங்கித் தனது பெருங்கருணையால் இறைவன் அவற்றை உண்ணின்று இயக்கி உய்விக்கின்றான். அவ்வுயிர்களில் மிகப் பக்குவமுள்ளோர் அவ்வருளால் இறைவனது சிறப்புக்களை விளக்கித் தோத்திரித்து உய்கின்றார்கள். அத்தோத்திரங்கள் ஏனைய ஆன்மகோடிகளும் கைக்கொண்டுய்யும் கருவிகளாக அமைகின்றன. சைவத் தெய்வத் திருமுறைகள் யாவும் அவ்வாறு தோன்றியவையே. அத்தகைய ஒரு நிகழ்ச்சியே **சிவமஹிம்ந ஸ்தோத்திரம்** என்னும் இவ்வரிய நூல் தோன்றிய வரலாறுமாகும்.

**புட்பதந்தர்** என்னும் கந்தர்வர் தலைவர், காசிமன்னனான **வாகு** என்பான் தனது போகத்துக்கு அமைத்திருந்த நந்தன வனத்தினின்றும் நாடோறும் மலர்களைக் கவர்ந்துசென்று சிவபூசை செய்துவந்தார். இவர் வானத்தில் சரிக்கும் கந்தர்வ

சாதியைச் சேர்ந்தவராதலின் நந்தனவனத்தின் புறத்தே சூழ்ந்திருந்த கடுமையான காவலும் பயனற்று ஒழிந்தன. மன்னவன் நுண்ணறிவுடையனுதலின் இக்களவில் ஈடுபட்டுள்ள வரை எவ்வாற்ருனும் காணவிரும்பிச் சூழ்ச்சி செய்தான். அவனுணைப்படி நந்தவனத்தினுள் ஆங்காங்கே சிவநின்மாலியங்கள் தூவப்பட்டன. இதனை அறியாது வந்த புட்பதந்தர் சிவநின் மாலியங்களை மிதித்துச் சிவாபராதத்துக்குள்ளானுர். அதனுல் வானில் சரிக்கும் ஆற்றல் நீங்கி, மண்ணுலகில் தங்கவேண்டி வந்தது. அவ்வபராதத்தினின்றும் கழுவாய் பெற்றுய்யவும் மீண்டும் வானில் சரிக்கும் ஆற்றல் பெறவும் சிவபெருமானது மகிமைகளைக் கூறித்தோத்திரிக்க விரும்பினுர். ஆனுல் அஃது தனதாற்றலுக்கப்பாற்பட்டதென்று கண்டு, "சிவபரஞ் சுடரே! உனது எல்லையற்ற பெருமைகளின் இயல்புகளை எல்லையற்ற சிறுமையேன் எவ்வாறு எடுத்துப் போற்றுவேன்" என்று பாடினுர். அதற்கிரங்கி மகிழ்ந்த இறைவனும் அவருக்கு அருள் புரிந்தார். அவ்வாறு அவர் பாடியதே **சிவமஹிம்ந ஸ்தோத்திரம்** என்னும் இவ்வொப்புயர்வற்ற அழகிய நூலாக உலகுக்குக் கிடைத்தது.

நூல் முழுவதும் சைவத்திருமுறைகள், மெய்கண்ட சாத்திரங்கள், அவற்றில் தோய்ந்த ஏனைய சைவப் பெருமக்கள்

இயற்றிய இலக்கியங்கள் இவற்றின் கருத்துக்களே விரவி விம்மிதம் அளிக்கின்றன.

முதலாவது திருப்பாட்டு இந்நூலின் உட்கிடக்கையை எடுத்துக்காட்டும் பாயிரமாகவும், அவையடக்கமாகவும். உலகோரை ஆற்றுப்படுத்தும் அறவுரையாகவும் அமைந்துள்ளது. 4, 5, 6 திருப்பாட்டுக்கள் நாத்திகரின் உள்ளீடில்லாத ஆரவார வாதங்களுக்கு இரங்குவனவாயும் அவற்றுள் மயங்காது உலக மக்களைத் தெருட்டுவனவாகவும் சிவஞான சித்தியாரில் வரும் பாடல்களை நினைவூட்டுவனவாகவும் அமைந்துள்ளன. ஏழாவது திருப்பாட்டு "விரிவிலா அறிவினார்கள்" என்ற அப்பர்சுவாமிகளின் தேவாரத்தையும் "யாதொரு பொருளை" என்ற கந்த புராணப் பாடலையும், "வேறுபடு சமயமெலாம்" என்னும் தாயுமானர் பாடலையும், "வேதம்பல் பக்குவமோர்ந்து" எனும் அவிரோதவுந்தியாரையும் நினைப்பிக்கின்றது எட்டு, இருபத்து நான்காவது பாடல்கள் "குடங்கை நீரும்" எனும் திருவிளையாடற் புராணப் பாடலிற் கூறுவதுபோல் சிவநேயச் செல்வர்கள் எளிதில் அடையும் பேறுகளைக் கூறுகின்றன. அப்பேறுகளை அடைந்தோர்க்கு எடுத்துக் காட்டுக்களாக இராவணனையும்,

பாணனையும் காட்டுவது பதினொன்று பதின்மூன்ருவது பாடல்கள் இவை "முழுத்தழல் மேனி" எனும் அரசுகள் தேவாரத்தைச் சிந்திக்க வைக்கின்றன. பன்னிரண்டாவது பாடலில் கயிலை மலையை எடுத்த இராவணனை இறைவன் தன் "பவள விரற் கொழுந்தால் அழுத்தி" யடர்த்த செய்தி 'ஆளுடையபிள்ளை யாரின் "பவழ நுனைவிரலாற் பையவூன்றிப் பரிந்தாரும்" எனவரும் திருவாலங்காட்டுத் தேவாரத்தைப் படி எடுத்துப் பாடியது போன்றே அமைந்துள்ளது. பதினைந்தாவது திருப் பாடலில் அநங்கன் இறைவனைப் "பிறதேவர்போல் நினைந்து நினைவுருவா நிலையனுஞன்" என்ற நயம் நினைந்து நினைந்து சுவைக்கற்பாற்று. "அடிபேறில்" எனும் அற்புதத் திருவந்தாதி யிலும் "வேதண்டமே புயங்கள்" எனும் சிதம்பர மும்மணிக் கோவையிலும் நாம் தரிசித்த இறைவனின் தனிப்பெருங் கூத்தை இந்நூலின் பதினூருவது பாடலிலும் தரிசித்து இன்புறலாம். "வையம்" என்னும் சொல் பூமி, தேர், கூர்மை என்ற பொருள் களில் பதினெட்டாவது திருப்பாட்டில் நின்று சுவை பயக்கின்றது.

இறைவன் வேண்டா கன்மங்களே அவற்றைச் செய் வோருக்குப் பலன்களை அளிக்கும்" என்ற புறப்புறச் சமயிகளை

மறுத்துச் சைவசித்தாந்தக் கருத்தை நிலைநாட்டுவது இருபதாவது திருப்பாட்டு, இருபத்தொன்றாவது பாட்டு "அரனடிக் கன்பர் செய்யும்" எனும் சிவஞான சித்தியார் பாடலை நினைவூட்டுவது. இறைவனது தனிப்பெருந் தன்மையையும் அவன் உயிர்களை முறைவழி நிறுத்துதலையும் இருபத்திரண்டாவது பாடல் படம் பிடித்துக் காட்டுகின்றது. இருபத்தைந்து முதல் முப்பதாவது வரையுள்ள பாடல்கள் ஒவ்வொன்றும் தனித்தனி நூல்களாக விரித்தெழுதற்கான பொருட் செறிவுள்ளன. முப்பத்தாறாவது பாடலில் நூலை முடித்துள்ள ஆசிரியரின் சொற் சாதுரியம் "சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும்" எனவரும் சேக்கிழார் பெருமான் போன்ற அருளாளர்களின் திருவாக்குக்களில் மட்டுமே காண உள்ளது.

இத்துணை அரிய நூலுக்கு வடமொழியில் அழகிய உரை வெளியிட்டவர் ஜகந்நாத சக்ரவர்த்தி என்னும் வங்காள அறிஞர். அதனை மேலை நாட்டாரும் படித்தின்புறும்வண்ணம் வங்காள உயர்நீதிமன்ற நீதிபதி சர் ஜான் உட்ரூப் (Sir John Woodroff) என்னும் ஆங்கிலேய அறிஞர் "ஆர்தர் அவாலன்" (Arthur Avalon) எனும் புனைபெயரில் ஆங்கிலத்தில் மொழி

பெயர்த்து விரிவான குறிப்புரையுடன் வெளியிட்டுள்ளார். கோவை — கவியரசு — வித்துவான் — கு. **நடேச கவுண்டர் P. O. L.** அவர்கள் இதனை வடமொழி மூலத்தினின்று நேரே தமிழ்ச் செய்யுள் வடிவில் மொழிபெயர்த்து உதவியுள்ளார்கள். கவியரசு அவர்கள் தமக்கே உரித்தாக்கிக்கொண்டுள்ள மிகுந்த கம்பீரமான நடையில் பாடல்கள் தெளிவும் பொருட் செறிவும் கொண்டு மதக்களிறுபோன்று செல்கின்றன.

இந்நூலின் பெருமையை அறிந்த கோவை — காந்திபுரம் "பத்மாலயா நிதி"யின் அதிபரும் சிறந்த சிவபூசா துரந்தரரும் எனது அரிய நண்பருமான திரு. **K. சென்னியப்ப கவுண்டர்** அவர்கள் இதனை அச்சிட்டுத் தமது அருமை மைந்தன் செல்வன் **C. பாலசுப்பிரமணியத்தின்** பிறந்த நாளும், தமிழ்ப் புத்தாண்டு நாளுமாகிய இன்று, கோயம்புத்தூரை அடுத்த மருதமலையில் முருகப்பெருமானுக்கு மகாபிடேகமும் சிறப்பு வழிபாடும் புரிந்து, மாகேசுர பூசை, அன்னம் பாலிப்புக்களுடன் வெளியிடுகின்றார்கள். சென்ற ஆண்டும் இவ்வாறே **"சிவகேசாதிபாத வருணனை ஸ்தோத்திரம்"** என்ற நூலை வெளியிட்டார்கள். கைம்மாறு கருதாது இத்தகைய

தொண்டுகளைப் புரிந்துவரும் கவியரசு அவர்களுக்கும், திருவாளர் K. **சென்னியப்ப கவுண்டர்** அவர்களுக்கும் சைவ உலகம் கடப்பாடுடையது.

இவர்களுக்கும், செல்வன் C. பாலசுப்பிரமணியத்துக்கும் எல்லா நலன்களையும் அருள அங்கயற்கண்ணி பங்கனை ஆலவாயின் அவிர்சடை அண்ணலை வாழ்த்தி வணங்குகின்றேன்.

"சேக்கிழார் நிலயம்"
371, வைசியாள் வீதி,
**கோயம்புத்தூர் – 1.**
13—4—1968

*சி. சு.* **கண்ணுயிரம்.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## புஷ்பதந்தர் அருளிச்செய்த

# சிவமஹிம்ந ஸ்தோத்திரம்

1. பெருமையுன துயர்வெல்லை யில,தறியார்
 பேசுவது பிழையா மென்னில்,
 சுருதியுணர் பிரமன்முத லியருமுனைத்
 துதிமொழியுந் துரிசா, மன்பால்
 கருதியுணர் தமதுமதி யளவுபுகல்
 பவர்எவர்க்குங் கரிசின் றென்றால்,
 ஒருபிழையு மிலதாகு மரனேயென்
 னுரையுமுனக் கேற்ப தாமே.

கரிசு—பிழை. துரிசு—குற்றம்

2. வாக்குமனம் கடந்ததுநின் மகிமைமறை

தானுமஃ தல்லாத் தன்மை

நீக்கிவெரு வுடன்புகலு, நின்மகிமை

நிகழ்த்தவலார் அரனே யாவர்

ஆக்கமிகு நின்குணத்தின் அளவென்னே ?

அறிகருவி யாதோ ? யார்தான்

போக்கருநின் மூர்த்தமதில் மனம்பதியார்?

யார்நாவாற் புகழா ரையா?

வாக்கு—பேச்சு. போக்கு—குற்றம்.

சகுண நிலை—உருவத்தோடு கூடிய நிலை; தடத்த நிலை—அதற்கு மாறானது நிர்க்குண நிலை எனும் சொருபநிலையாம்.

3. நறும்பூந்தே னணியமொழிச் சுரகுருசொல்

துதியமுது நலத்தா லுன்பால்

இறும்பூதெட் டனையும்விளைத் திடலரிதாம்;

உனதுபுக ழிசைக்கும் செய்கை

உறும்பேற்று லென்மொழியைத் தூய்தாக்கிக்

கொளவிழைந்தேன்; உயரு ஞானர்

பெரும்பேறே பரம்பொருளே புரமூன்றும்

பொடித்தஅருட் பெரிய தேவே

சுரகுரு—தேவர்களுடைய குருவாகிய பிருகஸ்பதி. அவரது பெயரே அவரது வாக்கின் வல்லமையை யுணர்த்தும்.

பிருகஸ்பதி—சொல்லின் வேந்தன்.

இறும்பூது—வியப்பு

எட்டனையும்—எள்ளவும்.

4. முக்குணத்தின் மூவுருவி னின்றுலகம்
முழுவதையும் படைத்துங் காத்தும்
ஒக்கவழித் திடுமுனது பேரிறைமை
மறைமூன்றும் உணர்த்தக் கேட்டும்
தக்கநிறை புண்ணிய மிலாதசிலர்
அதையிகழ்ந்து தருக்கும் கொள்வர்;
மிக்கமதி வாணர்களுக் கம்மொழிகள்
செவிசுடுமே விளங்கும் வள்ளால்

முக்குணங்கள்—சாத்துவீகம், ராஜஸம், தாமஸம். இறைவன் ராஜத குணவடிவாக அயனிடத்தும் சாத்துவிக குணவடிவாக அரியிடத்தும் தாமஸகுண வடிவாக உருத்திரனிடத்தும் நின்று படைத்தல், காத்தல், அழித்தலாகிய முத்தொழில்களையும் செய்கின்ருன். அவன் மும்மூர்த்திகளில் ஒருவன் அல்லன்.

5. யாதுவிழைந் தெவ்வுருவின் எம்முதற்கா
ரணத்தாலெவ் விடத்தின் மேவி
யாதுதுணைக் காரணமா இறைவனுல
கனைத்தினையும் இயற்றினு, னென்
றீதனைய குதர்க்கமொழி பிதற்றியுல
கினைமயக்கி, எந்தாய், சிற்சில்
பேதையர்நின் கணக்குவழக் கற்றஇறை
மைக்கிழுக்குப் பிடிப்பா ரந்தோ.

விழைந்து—விரும்பி.

முதற்காரணம்—ஒரு பொருளைச் செய்வதற்கான மூலப் பொருள். குடத்தை வனைவதற்கான மண்போல.

துணைக்காரணம்— மூலப்பொருளை ஒரு பொருளாகச் செய்வதற்குதவும் கருவி. குடத்தை வனைய உதவும் தண்ட சக்கரம் போல.

6. பகுப்புடைய சகம்படையாப் பண்பினதோ ?

படைப்பாமேல் படைப்பான் இன்றே ?

உகப்புடைய வாலறிவன் ஒழியவிசித்

திரவுலகுண் டாக்கு வோர்யார் ?

இகப்பரிய புல்லறிவர்க் குன்னிருப்பி

லையமுளத் தெழுவ தேனே ?

சகப்படைப்பு மீசனல்லார் தம்மாலா

மோவமரர் தம்பி ரானே.

சகம்—தோன்றியழிவது ஆகிய உலகம்.

வாலறிவன்—தூய அறிவினையுடையவன்.

புல்லறிவர்—அறிவு இன்றியே அஃதுடையராகத் தம்மை மதித்துள்ளோர்.

ஈசன்—படைத்தலாதி ஐந்தொழிலையும் தன்னுடைய செல்வமாகவும் அதிகாரமாகவும் உடையவன்.

அமரர்—தேவர்கள்.

7. அருமறையே சாங்கியமே யோகம்மே

பாசுபத மரிமார்க் கம்மே

பெருமையுடைத் தெனவொன்றே பேணிஒழு

குநருமிச்சா பேதத் தாலே,

வருநதிகள் நேர்புகுவ, வளைந்துசெலு

மவையும்,வழி வழியே யீற்றில்

திருவின்மிகு கடல்புகுத லெனநினையே

சேர்வர்,பர சிவமாந் தேவே.

அருமறை—வேதாந்த நெறி.

சாங்கியம்—சாங்கிய சமயம்.

பாசுபதம்—பாசுபத சமயம்.

அரிமார்க்கம்—வைணவ சமயம்.

நேராகச் செல்லும் நதியும் வளைந்து செல்லும் நதியும் இறுதியில் கடலைச் சேர்ந்தே முடிவதுபோல எச்சமயத்தாரும் இறுதியில் சிவனைச் சேர்ந்தே முத்திபெறுவர்.

8. மூரியெரு தெரியுமழுக் கட்டுவாங்
கம்பசுந்தோல் மூக்கப் பாம்பே
யாருமணு காச்சுடலை நீறுமுடை
தலைவாழ்க்கைக் கிறைவா கொண்டாய்;
சீருடைய பெருஞ்செல்வம் பலவகைய
சுரர்க்களித்தி திருக்க ணேக்கால்;
ஓரினிழி புலப்பேய்த்தேர்க் கனுபூதிச்
செல்வர்மயக் குறுவார் கொல்லோ.

மழு—மழுப்படை.

கட்டுவாங்கம்—தண்டத்தின் மேல் பிரமகபாலம் அமைந்ததென்றும் நீண்ட எலும்பின் மேற்பகுதியில் மற்றொரு சிறிய எலும்பைக்குறுக்காகக்கட்டப்பட்டதென்றும் கூறுவர். "கட்வாங்கிந்" என்பது இறைவனின் திருநாமங் களுள் ஒன்று.

பசுந்தோல்—யானை, சிங்கம். புலி, மான் ஆகிய வற்றின் உலராத தோல்.

மூக்கப்பாம்பு—சீறும் பாம்பு.

முடைத்தலை—முடை நாற்றம் வீசும்தலை; பிரமகபாலம்.
புலப்பேய்த் தேர்—ஐம்புல இன்பமாகிய கானல் நீர்
சிவபெருமான் "ஐந்தவித்தான்", அவாவற்றவன்.

9. நித்தியம்ச் சகமனைத்து மெனுமொருவன்;

ஒருவனநித் தியமே நேர்வான்;

நித்தவநித் தியப்பொருளா லிருமையதா

மெனுமொருவன் நிகழு மிந்தத்

தத்துவப்போர் வீரர்செயல் தனைவியந்தேன்;

புரமதன; சற்று நாணேன்;

வித்தகன்போ லுன்புகழை விளம்பலுற்றேன்

நாத்தினவு விருப்பு மாறே.

வீரர் என்றது இகழ்ச்சிக் குறிப்பு. புரமதனன்—திரி புரங்களை அழித்தவன். வித்தகன்—பேரறிஞன்.

10 பேரொளிநீள் பிழம்பாகி நின்றவுன்றன்

பெருமைகண்டு பிடிப்போ மென்றே

பாரிடந்தும் விண்பறந்தும் அரியயனும்

மாட்டாராய்ப் பயத்த ராயுன்

சீர்பரவப் பத்திசிரத் தையின்மிகுதி

யொடுகிரிச! திகைப்பு நீக்கி,

யேர்பரவு பெருமைதெளி வித்தனையுன்

வழிபாடெப் பயனி யாதே

கிரிச—மலையில் படுத்திருப்பவன், பரமேஸ்வரன்.

உன்சீர் பரவத் தெளிவித்தனை என இயைக்க.

11. புவனமொரு மூன்றினிலும் இனியொருவர்

எதிர்பொருநர் பொருந்தா தின்றென்

குவவுபுய மலைதினவு குடையலுறு

குறையுளதென் குறையாச் செல்வம்

தவவலிமைத் தசமுகனெய் தியது, புர

கரவுனபொற் றாளின் மேலே

உவகையொடு தனதலையாங் கமலமலர்

வனமலர்வித் துறும்பே றன்றே.

பொருந்தாது — பொருந்தாமையால்.

புரகரன் — திரிபுரங்களை அழித்தவன்; சிவபெருமான். தசமுகன் — பத்து முகங்களையுடையவன், இராவணன். தாள் — திருவடி; மலரின் தண்டு. (சிவபெருமானது) இரு தாள்களில் பத்துத் தாமரை மலர்களை மலர்வித்தவன் என்ற நயமும் காண்க.

12. உன்னைவழி பட்டடைந்த அருட்டுளியாற்

றழைத்தவலி யுடைத்தாய் ஓங்கும்

தன்னுடைய கரவனத்தா லுன்கயிலை

மலைபெயர்த்த சமர்த்தன் சாயப்,

பன்னுமெழிற் பவளவிரற் கொழுந்தையழுத்

தினையவன்பா தாளம் பாய்ந்த

பின்னுநிலை பெற்றிலன்மன் கயவர்பெறும்

வெறுக்கைகளி பெருக்கு மாலோ.

" சமர்த்தன் " என்றது இகழ்ச்சிக்குறிப்பு.

துளி — மழை. மழைத் துளியால் காடு தழைத்தது போலச் சிவனது அருட்டுளியால் இராவணனது தோள்கள் தழைத்தன.

13. வரதத்திரி புவனமெலா மேவல்செயத்
தன்னுணை வைத்தான்; தேவர்
அரசர்திருக் கீழ்ப்படுத்தான், பாணனுன
தருச்சணைசெ யாற்ற லாலே;
பெரியவியப் பிதிலென்னை ? நினதடிக்கீழ்த்
தலைவணங்கப் பெற்றால், எய்தற்கு
அரியதென வுளதெந்தப் பெறும்பேருே ?
சிவகதியு மரிதா காதே.

பாணன்—பாணுசுரன், மாபலியின் மக்கள் நூற்றுவரில் முதல்வன். சிவபெருமானைப் பேரன்போடு பூசித்ததால் உலகமூன்றினையும் தன்னடிப்படுத்து ஆணை நடாத்தியவன்.

14\. அந்தோவிப் பிரமாண்ட மழிகாலம்

வருமுன்னே ஆல காலம்

வந்தோவிங் கழிவதென வானவருந்

தானவரும் வருந்தல் தீர்ந்தே

சந்தோட முறநுகர்ந்து களங்கறுத்தாய்;

உலகுபுரந் தருவோர்க் கெய்தும்

வெந்தோடந் தானுமொரு பேரழகே

தருநுதற்கண் விளங்குந் தேவே.

களம் கறுத்தாய் — கழுத்துக் கருநிறம் பெற்ருய்.

வெம்தோடம் — கொடிய குற்றம்.

15. வென்றன்றி மீளாத விசிகமத

வேளமரர் அசுரர் வேறு

துன்றும்பல் லுயிரனைத்தும் வென்ருணை

செலுத்துசெய சீலன், பொங்கி

நின்றன்னைப் பிறதேவர் போனினைந்து

நினைவுருவா நிலைய ஞுன்

வென்றைந்து புலங்களைந்தார்ப் பேணுமை

பெருந்தீங்கு விளக்குந் தானே.

விசிகம் — அம்பு. வென்று அன்றி மீளாத — யார் மேல் செலுத்தினுலும் அவரை வென்றே திரும்பும். நினைவுரு — கட்புலஞகாது நினைவில் மட்டும் அறியக் கூடிய உரு; உருவமில்லாதவன்; அநங்கன்.

16. அடியசைவி ஞெடியினுல கழியுமெனப்

பேரைய மடையு, மோங்கு

நெடுவிசும்பி லுடுநிரைகள் சுழலு,மெழு

நிரையணைய நீண்ட தோளால்

சடையசையத் தேவுலகஞ் சலிப்படையும்

தாண்டவம்செய் சமயத் தன்பாற்

படிபுரக்க நடமிடுதி, பேரிறைமை

சிறிதிடுக்கட் படுத்து மாறே.

பிரமனிடம் வரம்பெற்ற ஓரரக்கனுல் உலகம் அழியாது காக்க இறைவன் மாலைக்காலத்தில் சந்தியா நடம் ஆடுவதை விளக்குகின்றது. பேரழிவினின்றும் காக்கும் செயல்களால் சிறிய இடுக்கண்கள் வரினும் ஏற்கலாம் என்பது. இதை இராஜ இராட்சத நியாயம் என்பர் வடமொழியாளர்.

விசும்பு — ஆகாயம். உடுநிரைகள் — நட்சத்திரக் கூட்டங்கள். எழு — பரிகை; தூண். தாண்டவம்—மாலைக்கால நடனம். படிபுரக்க — உலகத்தைக்காக்க.

17. அகல்வான முழுதுநிறைந் துடுக்கணத்தின்

குணத்தினுரை யலேமே லேந்தி

மிகவேக முடனிழிந்த கங்கைபனித்

துளியாக விளங்கு முன்மின்

நிகர்வேணி மயிர்முனையில்; நிலம்வளைந்த

கடல்நிரப்பு நீக்கு மாயின்

செகதீச நினதரிய திருமேனிப்

பெருமையெவர் தெளிநீ ராரே.

உடுக்கணம் — நட்சத்திரக்கூட்டம்.

அவற்றின் குணம் — வெண்மை நிறம்.

18. வையநெடு வையமதை யோட்டுபவன்
சததுருதி, மலையே விற்கை,
வையசுட ராழியவன் வைந்நுனைய
வாளி,வைய மாட்டு மாழி
செய்யசுடர் வெண்சுடராச் செய்துதிரி
புரதிரணந் தீத்தா யென்பர்
ஐயனுடைப் பொருள்களைக்கொண் டாடுவதிற்
பலனுய்தல் அமைவா காதே.

வையம்—பூமி, தேர். சததுருதி — பிரமன்; இந்திரன் எனவும் கூறுவர். வையசுடராழியவன் — கூர்மையும் ஒளியும் பொருந்திய சக்கரமேந்திய திருமால்.

வாளி—அம்பு. திரபுரதிரணம் தீத்தாய் — முப்புரங்களாகிய துரும்பை எரித்தாய். உடைப்பொருள்கள் — உடமையாகிய பொருள்கள். ஆடியது — விளையாடியது.

19. செங்கணெடு மால்கமல மாயிரங்கொண்

டுன்பூசை சிறக்கச் செய்வாற்

கங்கணென்று குறையுறக்கண் டங்கணென்று

பறித்தருச்சித் தருள்பெற் ருனல்,

சிங்கலறும் அன்பதுவே திருவாழி

யுருவாகிச் செகங்கண் மூன்றும்

எங்கணுமோ ரிடுக்கணுரு தினிதளிக்கின்

றதுபுரமுன் றெரித்த கோவே.

அங்கண் ஒன்று குறையுற — அவ்விடத்தில் ஒரு பூக் குறைய. அங்கண் ஒன்று பறித்து — அழகிய கண்களில் ஒன்றை இடந்து.

சிங்கல் — குறைவுறுதல்.

ஆழி — சக்கரம்.

20. வேள்விமுடிந் ததன்பின்னும் வேட்டவனுக்

கதன்பயனை விளைவிப் போய்நீ;

ஆள்வினையோ அழிவுறுமே; பலனரனர்ச்

சனையல்லா லளிப்ப தேதோ

வேள்விமுதற் கன்மபலன் நீயளிப்பை

எனுமுறுதி மேவித் தானே

கேள்விமறை யறைகருமங் களிற்சிரத்தை

கொடுமுயல்வர் கேடில் சோதீ.

வேள்வி — கர்மயாகம், தவயாகம், மந்திர யாகம், பாவனு யாகம், ஞான யாகம் எனும் ஐந்துவகை யாகங்கள். வேள்வி முடிவில் அதன் கர்மங்கள் அழிந்து விடுகின்றன. அழிந்துபோன ஒன்று பயனளிப்பதில்லை. வேள்வியின் பயனை அதைச் செய்தவனுக்கு உரிய காலத்தில் சிவபெருமானே ஊட்டுவன்.

21. பெருவேள்விப் பதியோய், எக் கியவினையிற்
பெருந்திறலோன்; தக்கப் பேரோன்
உருமேவு பல்லுயிர்க்குப் பதி, முனிவோர்
இருத்துவிக்குச் சதசோர் உம்பர்
அருவேள்வி யழிந்ததுறு பலனளிக்கும்
உனையிகழ்ந்த அழிம்பா, லுன்பால்
மருவாத சிரத்தையனுய் மகம்புரிவோற்
கதுதீங்கே வழங்கு மாலோ.

தக்கன் — தட்சன். திறமை மிக்கோன் என்பது பெயர்க்காரணம். இருத்துவிக்கு — வேள்வியை நடத்து பவர்கள். சதசோர் — காணக்கூடியிருந்த சபையோர்.

22. பல்லுயிரும் படைத்தவன்,ருன் படைத்தவளை
விரும்ப,வந்தப் பாவை யஞ்சி
வல்விரைந்து பிணையுருவாய் வான்வழியில்
ஓடவுந்தான், வலிந்து புல்லத்
தொல்லையொரு கலையுருவாய்த் தொடர்ந்தானைக்,
கணைதொடுத்துத் தொடர்ந்து நீபின்
செல்லவவன் ஓடவுமுன் சினந்தணியாய்
நாதஇன்னும் தொடர்கின் ருயே.

பல்லுயிரும் படைத்தவன் — பிரமன்.

பாவை — திலோத்தமை.

நாதன் — முறைசெய்து ஆணை செலுத்தும் இறைவன்;

சிவபெருமான். பிரமன் தான் படைத்த திலோத்தமையின் அழகில் மயங்கி அவளை விரும்ப, அவள் அஞ்சி ஒரு பெண் மான் வடிவுகொண்டு விண்வெளியில் தப்பி ஓடினுள். அவன் அவளைக் கலைமான் வடிவில் தொடர்ந்தான். அவனது அடாத செயல்கண்ட இறைவன் வேடவுருக்கொண்டு வில்லேந்தித் தொடர்ந்து அக் கலைமானை எய்தான். அயன் மிருகசீரிட நட்சத்திரமாயும், சிவபெருமான் திருவாதிரை நட்சத்திரமாயும் இன்னும் வான வெளியில் சரிக்கின்றனர் என்பது புராணம்.

23. பிடித்தசிலை தொடுத்தமலர்க் கணைவேளைப்

புரமெரித்தோய் பெருந்திப் புல்லைப்

பொடித்தலென எரித்தனையைம் புலன்களைந்தோய்,

அதுகண்டும் பொன்வெற் பின்றுள்

இடத்தினமை யிருந்தினனம் எழிலின்வயப்

பட்டெனத்தான் எண்ணு மாகில்,

வடித்தடங்கண் மாதர்மிகு பேதையரென்

பது,வரத வாய்மை யாமே;

பொன்வெற்பு ஈன்றுள் — உமாதேவியார்.

வடி — மாவடுவின் பிளவு.

24. மயானத்தி லாடுதி,மன் மதகோப,
பேய்சூழ வாழ்தி, வெந்த
மயானத்தின் பொடியணிதி, வெண்டலைமா
லிகையணிதி, மற்றுன் பேர்தாம்
தயாவற்ற உக்கிரனே முதலான
மங்களமற் றவைதாம் ஆக,
தியானித்தார்க் கவைவரத ! சென்றடையாத்
திருவருளுஞ் சிறப்ப வாமே.

மயானத்தின் பொடி — பிணம் சுடு சாம்பல்.

வெண்டலை மாலிகை — தலையோடுகளாலான மாலை.

உக்கிரன் — பெருஞ்சினமுடையோன்.

சென்றடையாத்திரு — போக்குவரவற்ற செல்வம்;
வீடு பேறு.

25. வாசியுற நிலைநிறுத்தி மனத்தினையுள்

மடக்கியுடல் புளகால் மன்னி

ஏசறுமின் பப்புனல்கண் நிறையவிசைப்

பருமமுத வேரி மூழ்கி

மாசறுயோ கியர்தம்முள் இரண்டறக்கண்

டநுபூதி மருவும் இன்பத்

தேசுறுமெய்ப் பொருளுன்னை யன்றியுமற்

றுண்டாமோ சிவபெம் மானே.

வாசி — மூச்சு.

தேசு — ஒளி; அறிவு.

26. செஞ்சுடர்நீ வெண்சுடர்நீ சேண்விசும்பு

நீபவனன் தீயு நீயே.

விஞ்சுபுனல் நீபுவியு நீயியமா

னனுநீ,யிவ் விதத்தால் எட்டாம்

துஞ்சலறு வடிவுடையை என்றறிஞர்

துணிந்துரைப்பர், சிவனே மற்றும்

எஞ்சியுள தெதுவுன்னை யன்றியுமொன்

றுண்டெனயா மெண்ணி லோமே.

**செஞ்சுடர் — சூரியன். வெண்சுடர் — சந்திரன். விசும்பு — ஆகாயம். பவனன் — காற்று. தீ — நெருப்பு. புனல் — நீர். புவி — மண். இயமானன் — ஆன்மா. இவ்வெட்டும் சிவபெருமானது அட்டமூர்த்தங்கள்.**

**அறிஞர் — ஈண்டு இகழ்ச்சிக்குறிப்பு.**

27. அகரமுதல் வெவ்வேரு முன்றெழுத்தா
லோங்காரம் அடைந்தோர்க் காக்கும்
பகவவொரு மும்முன்ரு மறைவிருத்தி
புவனமுயர் பண்பார் தேவர்,
தகவினுணப் பரவும்முழு வோம் விகற்ப
மறுதுரிய தாமம் பாடிச்
சகலமுமாம் நினையேதான் சாற்றுவது
நாதவொலி தன்னுன் மன்றே

அகரமுதல் முன்றெழுத்து—அ, உ, ம: இவை ஓங்காரத்தின் வியஸ்த நிலை. ஓம் என நாதத்தோடு பிரியாது நிற்பது சமஸ்த நிலை.

அகரத்தால்—இருக்கு, சத்துவ குணம், சுவர்க்கம், பிர்மாவையும்.

உகரத்தால்—சாமம், இராஜஸம், பூலோகம், அரியையும்,

மகரத்தால்—யஜுர், தாமஸம், பாதாளம், உருத்திரனையும் உணர்த்தும்

மறை—இருக்கு, சாமம், யஜுர், ஆகிய வேதங்கள்.

விருத்தி—சத்துவம், இராஜஸம், தாமஸம் என்ற குணங்கள்.

புவனம்—சுவர்க்கம், மத்தியம், பாதாளம்.

படைப்பாதி பயில் பகவர்—பிர்மா, விஷ்ணு, உருத்திரன்.

முழுவோம்—சமஷ்டி நிலையிலுள்ள ஓங்காரம்.

28. சிவவுனது திருப்பெயரில் திகழ்பவ,ருத்
திர,சருவ திகழீ சான,
பவமறுக்கும் பசுபதி,யுக் கிர,பீம
மகானெனவே பகரும் எட்டாம்
இவைகளைமற் றெவைகளினும் மேலாக
எடுத்துமறை ஏத்தும்; யானும்
தவலறுமன் பொடுநமவென் பதுகூட்டிச்
சொலிப்பணிதல் தவிரே னையா

பவ: ருத்ர: ஸர்வ: ஈசாந: பசுபதி: உக்ர: பீம: மஹாந் என்பன எட்டும் இறைவனது திருநாமங்கள். இவற்றை ஏனைய திருப்பெயர்களினும் சிறந்தனவாக வேதம் புகழும். அவற்ரோடு "தேவ" என்பதையும், நான்காம் வேற்றுமையுருபையும் "நம" என்பதையும் கூட்டி பாவாய தேவாய நம என்பது முதலாக ஓதுவது மரபு. யானும் அவ்வாறு ஓதி வணங்குவேன் என்ருர்.

29. போற்றிமிக நணியானே! போற்றிநெடுஞ்

சேயானே பெருந்தீ யாடி!

போற்றிமிக நுண்ணியனே! போற்றிமிகப்

பருமையனே காம கோபா!

போற்றிமிகத் தொன்மையனே! போற்றிமிகப்

புதியானே! முக்கட் செல்வா!

போற்றியெலாம் ஆனுனே! போற்றிஒன்றும்

அல்லானே! போற்றி!! போற்றி!!

சேயானே—தொலைவில் உள்ளவனே.

புதியானே—இளையவனே.

30\. ஞாலமெலாம் படைக்குமிரா சதகுணஞ்சேர்

பவனுக்கு நமோஒ நமவஞ்

ஞாலமெலாந் துடைக்குமிகு தமோகுணஞ்சேர்

அரனுக்கு நமோஒ நம,வஞ்

ஞாலஉயிர்க் கின்பளிக்குஞ் சத்துவஞ்சேர்

மிருடனுக்கு நமோஒ நம,வஞ்

ஞாலமடங் காமகத்தாய் முக்குணமில்

சிவனுக்கு நமோஒ நமவே!.

ம்ருடன்—சுகம்படச் செய்கின்றவன்.

சிவன்—பேரொளிப் பகவன்.

மகத் -- பேரொளி.

பக்தியின் மிகுதியால் "நமோ நம" என்று அடுக்கிக் கூறினர்.

31. செறிகவலை வசமான அடியேன்புன்

மனமெங்கே ? சிவனே ! யாரும்

அறிவரிதாய்க் குணங்குறியின் எல்லைகடந்

தவிருநின்சீர் அருமை எங்கே ?

அறிவனிஃ தெனினும்வர தா,பத்தி

எனதச்சம் அகற்றி யுன்றாள்

நறியமலர்க் கினியமொழி மலர்தூவும்

பேருறுதி நல்கிற்றச்சோ.

அவிரும் — ஒளிரும்.

அறிவனிஃது — இதனை அறிவேன்.

வரதா — கேட்ட வரம் அனைத்தையும் அருள்பவனே.

32. நீலகிரி யளவுமசி நெடுங்கடற்பாத்

திரத்திளக்கிக், கற்ப தாருக்

கோலெழுது கோலாக, ஓலம்போழ்

குவலயமாக் கொண்டெந் நாளும்

சாலமுயன் றகிலகலைச் செல்விவரைந்

தாலு,முன்றன் தகைமைக் கெல்லை,

பாலவிழி யுடைப்பரம, காணவரி

தெனல்புகழின் பால தாமோ.

மசி — எழுதும் மை.

ஓலம்போழ் — பனையோலை; ஏடு.

பாலவிழி — நெற்றிக்கண்.

## வேறு

33. பூவெயிற ஞமனொரு கந்தருவர் பூமான்
மேவுபிறை சூடியடி மென்மலர் பிழைத்த
பாவமற, வொண்டிறல் படைக்கமு னிசைத்த
தாவிலமு தானசிவ மகிமையிது தானே.

பூவெயிறன் — புஷ்பதந்தர்.

## வே று

34. தேவர்கள்தம் பெருமானைச் செல்லாத
செந்நெறிக்கே செலுத்து வானை,
யாவர்கரங் குவித்தன்பாய்ப் புட்பதந்தன்
இசைத்ததுதி மாலை யாலே
ஆவலொடு தோத்திரிப்பார், அவர்சிவனுக்
கணுக்கராய் அமரர் போற்ற
மேவரிய நலநுகர்ந்து சிவகதியும்
மிகஎளிதாய் மேவு வாரே.

செந்நெறி — வீட்டுலக வழி.

சிவனுக்கணுக்கராய் — சாமீப பதம் பெற்றவர்களாய்.

சிவகதி — வீடுபேறு.

35\. திருவாளன் புட்பதந்தன் வாய்மலரிற்

செனித்ததுதி மாலைத் தேனைப்

பெருமானுக் கினியதனைப் பவமறுக்கும்

அருமருந்தைப் பேணி யோதின்,

உருவாரக் கைக்கொள்ளின், ஓதநினைந்

திடினெருவர், உமையாள் பாக

மருவாதி அந்தமிலா மகதேவன்

திருவுளத்தை மகிழ்வித் தாரே.

**உமையாள்பாகம் மருவு ஆதி அந்தமிலா மகதேவன்— உமாதேவியாரைப் பாகத்திலே கொண்டவனும் ஆதியும் அந்தமுமில்லாதவனுமாகிய மகாதேவன்.**

36. போயபிற வியிலுன்னைப் புரகரயான்
போற்றுத புன்மை யேனி.'.
தாயபிற வியினாலே அறிந்தேன்; மற்
றிப்பிறப்பிற் சீவன் முத்தி
மேயதனால் உனைப்போற்ற மேலைவரு
பிறவியிலேன்; விளையு மிந்தத்
தீயவப ராதமிரண் டனையுமுளம்
பொறுத்தருள்க தேவ தேவே.

புரகரன் — திரிபுரங்களை அழித்தவன்.

**சிவமஹிம்ந ஸ்தோத்திரம் முற்றும்.**

திருஞானசம்பந்தர் சேவடி வாழ்க.

*பிறந்த தின வெளியீடுகள் :*

1. ஸ்ரீ சிவ கேசாதி பாதாந்த வருணன் ஸ்தோத்திரமும், ஸ்ரீ தச ஸ்லோகி ஸ்தோத்திரமும்.
   (புத்தாண்டு தினம், பிலவங்க ஆண்டு)

2. சிவமஹிம்ந ஸ்தோத்திரம்
   (புத்தாண்டு தினம், கீலக ஆண்டு)

*இந்நூல்கள் கிடைக்குமிடம் :*

1. கவியரசு, வித்துவான்
   திரு. கு. நடேசக் கவுண்டர், P.
   8/84, காந்திபுரம், நான்காவது வீதி,
   கோயமுத்தூர் - 12.

2. திரு. K. சென்னியப்ப கவுண்டர்,
   "பத்மாலய நிதி",
   55, காந்திபுரம், எட்டாவது வீதி,
   கோயமுத்தூர் - 12.

வெளியூர் அன்பர்கள் 0—20 பை தபால்தலை அனுப்பிப் பெறலாம்.

பாரதி அச்சகம், ஒப்பணக்கார வீதி, கோவை. போன் : 23540